ஸ்ரீ

# திருமால்குறள்வெண்பா.

இது

சென்னை பிரஸிடென்ஸிகாலெஜ் தமிழ்ப்பண்டிதராகிய

புன்னை

மாடபூசி - ஸ்ரீநிவாஸாசாரியரால்

இயற்றப்பட்டு,

---

சென்னை

மிமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1899.

# திருமாலகுறளவெண்பா.

(நாரணன் துதி.)

திருமாமகளிருக்குஞ் சீர்மார்பன் பாத
மருமா மலர்பணிந்தேன் மன்.
திருமால் குறள்வெண்பா செய்வினைக் காக
வருமா லவன்றாண் மலர்.

(நம்மாழ்வார் துதி.)

விடகோப வாயரவின் மேவுபிரான் பாதச்
சடகோபா நீயே சரண்.

(ஆண்டாள் துதி.)

காண்டா வனமெரித்த கண்ணற்குக் காதலியாம்
ஆண்டா ளடியே யரண்.

(யதிராஜன் துதி.)

தீதூர் பரசமயச் சிக்கறுத்த நற்குருவாம
பூதூர் முனியரசைப் போற்று.

(மணவாளமாமுனிகள் துதி.)

குணவாள ஞரணற்குக் கொன்னி டளித்த
மணவாள மாமுனிவா வா.

(நன்றியர் துதி.)

கந்தாடை யாரியர்தங் கான்மலரை யான்பணிந்தே
னந்தாத வின்பமுற நன்கு.

(அவையடக்கம்.)

களியன் கழகத்துட் கட்டுரைத்த தொக்கு
மெளிய னிசைத்த விது.

---

## திருமால்குறள்வெண்பா.

### நூல்.

மணிவண்ணன் பாத மலரைத் தலைமே
லணியுமவர்க் குண்டோ வவம். (க)

அவந்தீர வென்னெஞ்சே யானைமருப் பீர்த்த
நவநீதக் கையனையே நாடு. (உ)

காடென்றும் வீடென்று நங்கையென்றுந் தங்கமெ
வாடுநெஞ்சே மாதவனை வாழ்த்து. [ன்றும் (ங)

வாழ்த்துவார் வல்வினையை வாட்டும் வரதவனைத்
தாழ்த்துவார்க் குண்டோ தவம். (ச)

தவமென் றலைக்குடியேன் றன்மமேன் யாவு
மவனே யெனவறிவார்க் காங்கு. (ரு)

ஆங்கமல நீர்போ லமைந்தும் பிரிந்திருப்பார்
தாங்கமலை மார்பன் றமர். (சா)

தமரோ டமர்செய்த தன்மற்குக் கேளா
யமருடு நின்றா யருள். (எ)

அருளா லுலகெல்லா மன்றளக்க நீண்ட
கருளக் கொடியானே கா. (அ)

காதலிக்கா விந்திர னூர்க் கான்பிடுங்கி வந்துகடற்
பூதலத்து ணட்டாய் புர. (கூ)

புரந்தரனைப் போரின்கட் பொங்கொலியிற் சாய்த்த
நிரஞ்சனனை நீமனனே தேடு. (க0)

தேடித் தனையடைந்த நின்மலற்குப் பொன்னளித்
சாடிச் சகடழித்தான் றான். [தோன் (கக)

தானே கடவுளெனுந் தானவனை மார்பிடந்த
மானேறே வானவர்தம் மன். (கஉ)

மன்னு வளியென்று மாவலிபான் மண்ணிரந்த
வென்னு தனுக்குண்டோ வீடு. (கரு)

ஈடாவார் யாவரோ வெம்மா னிணையடிக்கட்
கோடாத கொள்கையினார்க் கிங்கு. (கச)

குஞ்சரநீள் கையெடுத்துக் கூவக் குளக்கரைவா
யஞ்சலென வந்தா யளி. (கரு)

அளியா பயன்பாடு மம்பற்ப நாபா
வெளியேனுக் கின்றிங் கிரங்கு. (கசு)

இரங்காத பூதனையை யின்னுயிரை மாய்த்த
வரன்கண்டீர் நந்தன் மகன். (கஎ)

மகன்வாய்ச் சகங்கண்ட மாதரசோ தைக்கு
மிகமாய மூட்டினான் மேல். (கஅ)

மேலான வாழ்வெல்லாம் விஞ்சு முலகளந்த
காலானை நாநினைத்தக் கால். (ககூ)

கான்மடுவி னிற்குதித்துக் காளியற்குக் காலளித்த
நான்மறையின் மெய்ப்பொருளை நாடு. (உ0)

நாடாது நாள்கழித்த நன்னெஞ்சே நாரணனைப்
பாடாது வீடேது பார். (உக)

பாராகி விண்ணாகிப் பாவகமாய்க் காலாகி
நீராகி நின்றானை நேர். (உஉ)

நேராய் வெகுண்டெழுந்த நீள்கொக்கின் வாய்பிளந்த
காரானைக் கண்ணனைநீ காண். (உங)

காண்டா வனமெரித்த கண்ணன் கழலிணையை
வேண்டாதார் தம்பிறப்பு வீண். (உச)

வீண்கோப மேற்கொண்டு வீடுமற்கு முன்னேமி
ஆண்மையற வேயெடுத்தா யாண்டு. (உரு)

ஆண்டுபல வீண்போக்கி யல்லலுறு நெஞ்சேயெம்
மாண்டவரின் மாண்டகுணத் தாழ். (உ௬)

ஆழியா லாழியினை யன்றுமறைத் தோன்சீரை
வாழி மனனே வழுத்து. (உ௭)

வழுத்தகிலே யாமனமும் வானவர்கோ னின்னைப்
பழிச்சவறி யாநாவும் பாழ். (உ௮)

பாழாக்க வந்தபெரும் பார்தட் பருவாயைச்
சூழாக்கி னையென்னைக் கொள். (உ௯)

கொள்கொம் பிலாதகொடி நே ரடியேனை
யெள்காது காத்தலியல் பாம். (௩௦)

பாஞ்சாலிக் கன்றவைக்கட் பட்டாடை யிட்டளித்த
தீஞ்செய்தி பாவந் தெறும். (௩௧)

தெறநின்ற கன்றைவிளந் தெட்டபழ மண்மே
லுறவெறிந்த வுத்தமன்பே ரோது. (௩௨)

ஓதிப் புகழ்தக்க வுத்தமன்கா ணீர்கண்டேன்
பாதிப் பிறைச்சடையான் பால். (௩௩)

பாலாழிக் கண்வளரும் பாம்பணையான் பாதத்தைத்
தோலாதென் னேவே துதி. (௩௪)

துதிசெய் துனபாதத் தொண்டுபுரிந் தோரை
மதியா தவர்பிறப்பு வம்பு. (௩௫)

வம்பேய்ந்த வைம்பொறியின் வாய்ப்பட் டழியாது
கொம்பேந் துரத்தானைக் கூறு. (௩௬)

கூறுபுகழ்க் கோவிந்தா கோணீங்கி யுள்வீட்டி
லேறுவழி கண்டுகந்தே னே. (௩௭)

தேனொழுகு பூந்துளவத் தெய்வத் திருத்தாராய்
வானொழியா வாழ்வருள வா. (௩௮)

வாங்குகட லும்புவியும் வானும் பலதிசையு
மாங்குனக்குக் கண்ணோ வனம். (௩௯)

அன்னமா யாரணத்தை யம்புயற்கு முன்னுரைத்த
பன்னரியின் சீரேயின் பம். (௪0)

பஞ்சவர்க்குத் தூதுவனாய்ப் பாம்புயர்த்தோன் பட்
ளஞ்சலின்றிச் சென்றா யருள். [டணைத்து (௪௧)

அருணிறைந்த கேசவனே யச்சுதனே நின்னைக்
கருதார்க்குப் போமோ கரு. (௪௨)

கருங்கடலிற் கண்டுயிலுங் கார்வண்ணன் றாளை
யொருங்குணர்வார் மோக்கத் துளர். (௪௩)

உளனிலனா யும்பர்க்கு மோதவரி யானை
யெளியேன் புகழ்வ தெவன். (௪௪)

எவன்மீனாய்ச் சோமுகனை யிடழித்து நின்றா
னவன்வண்ண மாங்கர்ச்சு னம். (௪௫)

அர்ச்சுனற்குச் சாரதியா யாங்குபதி னெட்டளித்த
நிர்ச்சரரின் றேவை நினை. (௪௬)

நினையாது நின்னை நீள்புவியில் யாரே
வினைநீங்கி வீடெய்து வார். (௪௭)

வார்சடையான் வாரிசத்தான் வானவர்கோன் றாமறி
கூர்படையாய் நின்புகழின் கூறு. [யார் (௪௮)

கூற்றுங் குலையுங் கொடுவினையு நீங்கிடுமாற்
போற்றிற் புனிதன் புகழ். (௪௯)

புகழாச் சிசுபாலன் பொன்முடிபோய் வீழ
விகலாழி தொட்டா யிரங்கு. (௫0)

இரங்கிநிரை மேய்த்தவிட மெங்கோனை முன்ன
மரங்செழுமு கான மலை. (௫௧)

மலையான் மழைதடுத்த மாமுகிலின் பாத
முலையாதென் னெஞ்சே யுணர். (௫௨)

உணர்வா ருளமலர்க்க ணூறுநறுந் தேனை
இணர்போலுந் துன்பந் துடை. (௫௩)

துடைத்துப் படைத்தளிக்கத் தொன்றூ வுருவ
மெடுத்தவனை யெங்க ளிறை. (௫௪)

இறையாய்த் தறையாண்டு மென்னபயன் கண்மர்
மறையான் ஞம மறந்து. (௫௫)

மறந்தாலு மென்னை மறவா விகழ்ந்து
துறந்தாலு நீயே துணை. (௫௬)

துணையு மெனக்கணியுந் தொல்புவியு மெல்லாம்
பணைமருதஞ் சாய்த்தான் பதம். (௫௭)

பதமறியா நொய்யதயிர்ப் பானைக்கு முத்தி
யெதுபதியே யீந்ததுவென் னே. (௫௮)

என்னை யுனதாண்மை யிசசொடுங் காட்டனலை
யுன்வாயிட் டுண்டுகந்தை யால். (௫௯)

ஆலிலையிற் பாலகனு யன்றுபெரு நீர்த்துயின்ற
மாலிறையே நீயருள வா. (௬0)

வானாடர்க் காப்பாலின் வண்ணக் கடல்கடைந்தோ
கோனா கணைக்கிடந்த கோ. [ன் (௬௧)

கோமன்ன ரைப்பலகாற் கொற்ற மடக்கியது
நீமன் மழுவான் சினம். (௬௨)

சினங்கொண்ட தானவனைச் செற்றதிருக் கேழன்
மனங்கொண்டேற் குண்டோ மறம். (௬௩)

மறவாமை யாய்க்கடலுண் மந்தரத்தைத் தாங்கு
மிறைவா நினக்காரிணை. (௬௪)

இணையிலாப் பெண்ணணங்கா வின்னமுத மீந்த
துணைவா வதன்மூலஞ் சொல். (௬௫)

சொல்லரிய துன்பத்தேன் றன்மதியே னின்பதத்
புல்லுவதெக் காலம் புகல். [தைப் (௬௬)

புகல்புகுந்தே னின்னைப் புயல்வண்ணா நன்றா
ரிகலென்ன செய்யு மினி. (௬௭)

இனியஞ்சே னெஞ்சமே யெம்பெருமான் காக்க
நனிநின்றா னம்மை நயந்து. (௬௮)

நயமுணரா வைம்பொறியை நம்பிக்கெட் டேனைத்
தயையுடையாய் நன்மையுறத் தாங்கு. (௬௯)

தாங்கா திகழ்ந்திடினீ தாமோ தராவென்னைத்
தாங்காப் பவரெவரோ தான். (௭௦)

தானே தனக்கிணையாந் தாசரதி கோசிகனைக்
கோனாக் கொண்டதற்கென் கூறு. (௭௧)

கூறு பிறைச்சடையான் கொண்டவில்லைக் கொற்
வேறுபடச் செய்தாய் விரும்பு. [றவையுள் (௭௨)

விரும்பு சுவைக்கனியே விண்ணமுதே செய்யா
கரும்பே கருமணியே கா. (எ௩)

காகா வெனவீழ்ந்த காக்கையினை நீகாக்க
மாகாத்தா னென்பரதென் மற்று. (எ௪)

மற்றாரென் சொல்லார் மாயனைவிட் டன்னியரைப்
பற்றிப் பதம்பணிந்தக் கால். (எ௫)

காற்றுகளாற் காகுத்தா கல்லினைப்பெண் ணாக்கிய
னேற்றத்துக் கீடுண்டோ வீங்கு. [கின் (எ௬)

ஈங்குமயற் கண்ணமூர்ந்தி யெம்மான் பெயர்மறந்தி
ராங்குறுமக் கார்துணையா வார். (எ௭)

வார்கடலை யோர்கணையால் வற்றுவித்த வில்லவனின்
கார்மேனி யென்கண்முன் காட்டு. (எ௮)

காட்டும் பலமாயக் காட்சியினை யானறிய
மாட்டுவனோ மாமாயா மன். (எ௯)

மன்னு மணிவண்ணா மாயவனே மாயார்பா
வென்னாத நெஞ்சே யிரங்கு. (அ0)

இரங்காத வாலிபட வீசாமறைந்து
சரங்கோத்த தென்னே சரி. (அக

சரிவளைக்கை மாதரார் தம்வலையுட் சிக்கி
யிரிமனமே யெம்மானை யேத்து. (அ௨)

ஏத்தவறி யாவெளியே னீடேற வின்னருளாற்
காத்திடநீ நின்னுட் கருது. (அ௩)

கருதரிய மேனியாய் காயாம்பூ வண்ணா
வொருதனியே னெஞ்சத்து ளொன்று. (அ௪)

பெருமாவம்.

பேசறியேன் சொல்லநு -
வாசகத்தை நீயினிதா வாங்கு.

வாங்கு திரைக்கரையுள் வந்துபணி வீடணைற்,
கோங்கிலங்கை தந்ததுமெவ் வாறு. (அஎ)

ஆறணிந்த வேணியனு மம்புயத்தோ னும்முடலிற்
கூறுபெறக் கொண்டோயெற் கொள்.

கொள்ளா தினியுலகுங் கூற்றுமெனை யள்ளாது
புள்ளேற்றா யென்னுட் புகு. (அகூ)

புகலரிய நான்மறைக்கும் போற்றரியாய் நிற்குத்
தகன்றம்பி யானதுமோர் கூத்து. (கூ0)

கூத்தன்போற் பல்லுருவங் கொள்ளுமுயிர் கோபா
நீத்தொழிலே நீத்திருக்கச் செய். [லா (கூக)

செயயதிரு நாடதனைச் சேரச் சராசரங்க
ளாயபணித் தாயென் னருள். (கூஉ)

அருளொழுகு கண்ணிணையு மம்புயநேர் வாயும்
மருளறயான் காணவெதிர் வா. (கூங)

வாயுனையே வாழ்த்துகவுன் வண்ணத்தைக் காண்க
மாயவுன்பேர் கேட்கசெவி மற்று. [விழி (கூச)

மற்றென்ன செய்வேனுன் மாலேகின் பொற்பாதக்
குற்றேவ லன்றிக் குறித்து. (கூரு)

குறித்தவெலாம் வந்தெய்துங் கோள்கொடுமை செய்
தறித்தனயன் பேர்சொல்லத் தான். [யா (கூசா)

தானவரை வேரறுத்த தாமோ தரற்கடிய
னானெனவென் னெஞ்சேவை நார். (கூஎ)

லகுறள்வெண்பா.

யே விண்ணமுதே செய்ய
கா. (௯௮)

மபர் பாடநெஞ்சே
காக்
மப ளுடு. (௯௯)

ாதூவி நற்றூபங் காட்டியுனைப்
மற்
பாடுவேற் குண்டோ பவம். (௧00)

வபாசத் துள்ளாழ்ந்து பட்டொழிவன் மாயா
காற்று-க நீமுனிந்தா லன்று. (௧0௧)

னேற்
அன்றோ வலதின்றே வத்தா வெனக்குறுதி
யென்றோ வெனக்காத் திரு. (௧0௨)

இருவினையு ளாப்புண்ட வின்னுயிர்கா ளெம்மான்
றிருவடியைச் சேர்மின் றினம். (௧0௩)

தினமா தரைநாடு நீமனனே சோதி
வனமாலை மார்பனையே வாழ்த்து. (௧0௪)

வாழ்த்துகந்து வல்லமருள் வாணம் குயிரளித்த
காழ்த்திறத்த வில்லுடையாய் கா. (௧0௫)

காரானைக் கற்பகத்தைக் கண்மணியைக் கோமளத்
சீரானை யென்னுளமே செப்பு. [தைச் (௧0௬)

செப்பே னுனநாமஞ் சீர்மையிலார் நட்புவிடே
னெப்போ தறுவே னிடர். (௧0௭)

இடரே தினிநெஞ்சே யெந்தமக்கா நின்று
மடநீக்குந் தெய்வ மணி. (௧0௮)

முற்றிற்று.

---

(ஆக்கியோன் பெயர்.)

திருமால் குறள்வெண்பா செய்தானும் புன்னை
வருசீனி வாசன் மகிழ்ந்து.